பகவத் பாதை
Bagavath Path
தனிச்சுற்றுக்கு மட்டும் இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு 15-04-2013

# நிகழ்வும் செயலும்

- ஸ்ரீ பகவத்



மனதைப் பயன்படுத்தி நமது செயல்களை நாம் நிர்வாகம் செய்து கொள்ளலாம். ஆனால் மனதைப் பயன்படுத்தி மனதையே நிர்வாகம் செய்ய எண்ணுவதுதான் தவறு.

- ஸ்ரீ பகவத்



நமக்கு எத்தனையோ விதமான மன உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. மகிழ்ச்சி, பயம், கோபம், துயரம், அன்பு, வெறுப்பு – இப்படிப் பலவிதமான மன உணர்ச்சிகள் ஏற்படுகின்றன.

இவற்றை மன அனுபவங்கள் என்று குறிப்பிடுகிறோம்.

சில அனுபவங்களை நாம் இன்பமாக உணர்கிறோம்; சிலவற்றைத் துன்பமாக உணர்கிறோம்.

நமக்கு ஏற்படும் அனுபவங்கள் இன்பமாக இருக்கும்போது நாம் நம்மை மறந்து விடுவோம். நமக்கு ஏற்படும் அனுபவங்கள் துன்பமாக இருக்கும் போது நாம் நம்மை மறந்துவிடுவதில்லை.

நமக்கு மன உணர்ச்சிகள் எப்படி ஏற்படுகின்றன? நாமாக உருவாக்குகின்றோமா? நாமாக உருவாக்குவதாயின் நமக்குப் பிடித்தமான உணர்ச்சிகளையல்லவா உருவாக்கிவிடுவோம்? நமக்கு ஏற்படும் உணர்ச்சிகள் அனைத்தும் தாமாக உருவாகிவிடுகின்றன; நமது முயற்சி இல்லாமலேயே உருவாகிவிடுகின்றன.

அப்படி உருவாகும் உணர்ச்சிகள் பலவகையாக உள்ளன. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஒவ்வொரு வகையாக உள்ளன. அந்த உணர்ச்சிகள் ஏன் அப்படி இருக்கின்றன? அவற்றுக்கு ஒழுங்குமுறை எதுவும் கிடையாதா? தாமாக உருவாவதால் அவை இப்படித் தாறுமாறாக ஏற்படுகின்றனவா?

நமக்கு ஏற்படும் ஏதாவது ஓர் உணர்ச்சியை எடுத்துக்கொள்வோம். நமக்கு மன வருத்தம் ஏற்படுகிறது என வைத்துக்கொள்வோம். நமது மனம் துயரம் – வருத்தம் – கவலை என்ற ஓர் உணர்ச்சியை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது.

இந்த உணர்ச்சி ஏன் இப்படி ஏற்பட்டது? இந்த உணர்ச்சியை நாமாகக் கொண்டுவரவில்லை. நம்மையறியாமல்தான் ஏற்பட்டுள்ளது. ஆனால் நமக்குள் ஏற்பட்டுள்ளது.

நமக்குள்ளேயே நிகழ்ந்தாலும் நம்மையறியாமல் ஏற்பட்டுள்ளது. அவை அனைத்தும் தாமாக நிகழ்ந்தாலும் அந்த நிகழ்வுகளில் ஓர் ஒழுங்குமுறை உள்ளது; ஒரு காரண காரியத்தொடர்பு உள்ளது.

நம்மை ஒருவர் அவமரியாதை செய்துவிட்டதாக வைத்துக்கொள்வோம். இப்போது நமக்குள் என்ன ஏற்படுகிறது? அவர் நம்மை அவமானப்படுத்துகிறார் என்பதை நாம் புரிந்து கொள்கிறோம்.

அவருடைய நோக்கம் நமக்கு எதிராக உள்ளது என்பதைப் புரிந்து கொள்கிறோம்.

அவரிடமிருந்து நம்மைப் பாதுகாக்கவேண்டும். அவரை இதுபோல் மீண்டும் நடக்காதவாறு பார்த்துக்கொள்ளவேண்டும். நம்மைப் பாதுகாக்கும் நோக்கத்திலும்; நம்மிடம் விரோதம் கொண்டவரைக் கட்டுப்படுத்தும் நோக்கிலும்

நமது அடிமனதிலிருக்கும் நமது மன இயல்பு உதவிக்கு வருகிறது.

நமது இயல்பே நமது மனதினுள் ஒரு வலியுணர்வை ஏற்படுத்துகிறது;

விரோதம் கொண்டவர்மீது கோப உணர்வையும் ஏற்படுத்துகிறது. இப்படி நாம் சந்திக்கும் சூழ்நிலையை எதிர்கொள்ளும் விதமாக நமது மன இயல்பு பலவிதமான உணர்ச்சிகளை நம்மிடம் ஏற்படுத்துகின்றது.

நமது உணர்ச்சிகளுக்கு நமது மன இயல்பு தான் காரணம்;

நமது மன அனுபவங்களுக்கு நமது மன இயல்புதான் காரணம். நமது இயல்பு என்பது நமது அடிமனம்; நமது Subconscious Mind.

நமது இயல்பு நமக்கு மட்டுமே சொந்தமாக இருந்தாலுங்கூட அதனை நம்மால் வெளிப்படையாக அறியமுடியாது. அது நமக்குத் தெரியாமல் நமக்குள்ளேயே புதைந்து கிடக்கிறது.

நமக்குத் தெரிவதெல்லாம் நமது Conscious Mind மட்டுமே; நமது வெளிமனம் மட்டுமே; நமது உணர் மனம் மட்டுமே. வெளிப்பட்ட உணர்ச்சியை மட்டுமே நம்மால் உணர்ந்து கொள்ளமுடியும். வெளிப்பட்ட அனுபவங்களை மட்டுமே நம்மால் உணர்ந்து கொள்ள முடியும்.

நமது உணர்ச்சிகளுடைய மூலம் - காரணம் நம்முடைய இயல்பே; நம்முடைய அடிமனதே; நம்முடைய Subconscious Mind மட்டுமே.

நமது இயல்புதான் கர்த்தா.

நமது உணர்ச்சிகளெல்லாம் விளைவுகளே.

நமது அடிமனதுதான் கர்த்தா.

நமது உணர்மனது கர்த்தா அல்ல; அது விளைவே. அடிமனதினால் ஏற்பட்ட விளைவுதான் உணர்மனது.

உணர்மனதில் உள்ளவை அனைத்தும் விளைவுகளே; வெளிப்பாடுகளே. உணர்ச்சிகளின் காரணமாக நாம் புறச்செயலில் ஈடுபடுகிறோம்.

கோபம் என்பது நமது உணர்மனதில் ஏற்பட்ட உணர்ச்சி.

கோபத்தில் நாம் ஒருவரைத்திட்டிவிடுகிறோம் அல்லது சண்டையிட்டுவிடுகிறோம். இது புறச்செயல்.

கோபம் என்பது அகச்செயல். அது வெறும் உணர்ச்சி மட்டுமே. அது நம் உணர்மனதில் தோன்றும் உணர்ச்சி மட்டுமே. அது புறச் செயலுக்குக் காரணமாக அமைந்திருந்தாலும், அது புறச்செயல் அல்ல.

அது அக உணர்வு மட்டுமே. அக உணர்வின் விளைவாக புறச்செயல் ஏற்படுகிறது - உணர்ச்சியின் விளைவாக செயல் ஏற்படுகிறது.

உணர்ச்சிகளுக்கெல்லாம் காரணம் நமது இயல்பே.- நமது அடிமனதே. ஆனால் நமது செயல்களுக்குக் காரணம் நமது அடிமனது அன்று.

நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளுக்கு மட்டுமே

நமது அடிமனதுதான் கர்த்தா.

நமது செயல்களுக்கான கர்த்தா நமது அடிமனது அன்று. செயல்களுக்கான கர்த்தா நமது உணர்ச்சிகள் மட்டுமே; நமது உணர்மனது மட்டுமே.

Subconscious Mind is the cause for our Conscious Mind and our Conscious Mind is the cause for our External Action.

நமது உணர்ச்சிகளுக்குக் கர்த்தாவான அடிமனதை நமது செயலுக்குமே கர்த்தா என்று ஏன் கூறக்கூடாது? நான் சிந்திப்பதைப் பேனாவால் எழுதுகிறேன் என்றால்

எழுதுவதற்குக் காரணம் பேனாவா?

சிந்தனை தானே பேனாவை இயக்கி எழுதத் தூண்டுகிறது? பேனா வெறும் கருவி மட்டுந்தானே?

சிந்தனை மட்டுந்தானே கர்த்தா? சிந்தனையை எழுத்தாக்கும் பேனா எப்படி கர்த்தாவாக முடியும்?

நமது அடிமனதும், உணர்மனதும் இப்படித்தான் செயல்படுகின்றனவா? அவை எப்படிச் செயல்படுகின்றன?

நமக்கு ஓர் இழப்பு ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம். நமக்கு ஏற்பட்ட இழப்பு, நமக்கு மனவருத்தத்தைக் கொடுக்கிறது.

நமது அடிமனது செயல்பட்டதால், நமது இயல்புக்கேற்ற அனுபவம் ஏற்படுகிறது. நமக்கு ஏற்படும் அனுபவம் மன வருத்தம் என்னும் உணர்ச்சியாக வெளிப்படுகிறது.

அடுத்ததாக நமக்குள் என்ன ஏற்படுகிறது?

மனவருத்தம் என்னும் உணர்ச்சி நமக்குப் பிடிக்கவில்லை. அதிலிருந்து விடுபடவேண்டும் என்னும் எண்ணம் ஏற்படுகிறது.

மனவருத்தம் ஏற்பட்டது முதலாவது நிகழ்வு.

அதிலிருந்து விடுபடவேண்டும் என்னும் உணர்வு ஏற்படுவது இரண்டாவது நிகழ்வு.

முதலாவது நிகழ்வுக்கும், இரண்டாவது நிகழ்வுக்கும் என்ன தொடர்பு? முதலாவது நிகழ்வாக வெளிப்பட்டது தான் நமது உணர்மனம் - நமது Conscious Mind.

இரண்டாவது நிகழ்வு எங்கே ஏற்படுகிறது? அதுவும் உணர்மனமாகத்தான் இருக்கிறது. உணர்மனம் - உணர்ச்சி என்பது விளைவு மட்டுமே.

அடிமனதின் இயல்புகேற்ற தன்மையாக, உணர்மனம் - Conscious Mind வெளிப்படுகிறது.

உணர்ச்சியாக வெளிப்பட்டதும், அந்த உணர்ச்சியிலிருந்து விடுபடவேண்டும் எனும் எண்ணமாக வெளிப்பட்டதும் உணர்மனமே. இந்த இரண்டு அடுக்குகளும் உணர்மனமே.

இந்த இரண்டு அடுக்குகளும் ஒன்றன்பின் ஒன்றாக வருகின்றன. இந்த இரண்டு அடுக்குகளுமே உணர்மனதாக இருந்தபோதிலும், இவை இரண்டின் தன்மைகளும் ஒன்றல்ல.

முதற்பகுதி வெறும் உணர்ச்சியாகவும், அனுபவமாகவுமே உள்ளன. அங்கு நமக்கு எந்தச் செயலும் கிடையாது. அங்கு நிகழ்வு மட்டுமே உள்ளது. Happening மட்டுமே உள்ளது; அனுபவம் மட்டுமே உள்ளது; உணர்ச்சி மட்டுமே உள்ளது.

இந்த முதற்பகுதி ஒரு கணநேரம் மட்டுமே ஏற்பட்டு மறைந்துவிடுகிறது. முதற்பகுதியின் மறைவில் இரண்டாம் பகுதி வெளிப்படுகிறது.

கடலில் குளித்திருக்கிறீர்களா? இடுப்பளவு ஆழமுள்ள கடல் நீரில் குளித்துக்கொண்டிருப்போம். நம்மை விடவும் இரண்டு மடங்கு உயரமுள்ள அலையொன்று நம்மை நோக்கி வரும்.

அந்த அலையிலிருந்து தப்பிக்க நாம் எதுவுமே செய்யத் தேவையில்லை. அதுவாகவே நம்மைக் கடந்து சென்றுவிடும். ஆனால் அது நம்மைக் கடந்து செல்லும்போது நம்மால் தரையில் காலுன்றி நிற்கமுடியாது.

அது நம்மை சற்று உயரத்துக்கு - ஓரடி உயரத்துக்கு தூக்கிவிட்டு மீண்டும் தரையில் இறக்கி வைத்துவிட்டு நம்மைக் கடந்து சென்றுவிடும்.

இவ்வாறு நமக்கு ஏதாவது ஓர் அனுபவம் - ஓர் உணர்ச்சி ஏற்படும்போது கணநேரத்துக்கு ஒரு தன்னை மறந்த நிலை ஏற்பட்டு

பிறகு அதுவும் கணநேரத்தில் மறைந்துவிடும்.

நமது அனுபவங்களின் முதல்நிலை. இப்படி ஒரு அலையைப்போல் வந்து நம்மைக் கடந்து செல்கிறது.

அனுபவம் கடந்து செல்லும்போதுதான் நாம் சுயபுத்திக்கு வருகிறோம் - Self Consciousness க்கு வருகிறோம். நாம் சுயபுத்திக்கு வரும்போதுதான் நமக்கு ஏற்பட்டது மனக்கவலை என்பதைப் புரிந்துகொள்கிறோம். அந்த மனக்கவலையின் தாக்கம் நம்மிடம் இருப்பதையும் புரிந்துகொள்கிறோம்.

இப்போதுதான் நாம் அந்தக் கவலையிலிருந்து விடுபடவேண்டும் எனும் எண்ணத்தையும் உருவாக்கிக்கொள்கிறோம். நமது இயல்புகள் என்னும் அடிமனது நமது நேரடித் தொடர்புக்கு அப்பாற்பட்டு, மறைபொருளாக இருக்கிறது. அதை நம்மால் நேரடியாக அறியவோ உணரவோ முடியாது.

இதுபோல் நமது உணர்மனதின் முதலாவது வெளிப்பாடான உணர்ச்சி நிலையானது உணர்ச்சியாக வெளிப்பட்டாலும் வகைப்படுத்தி உணரமுடியாத உணர்வாக உள்ளது.

நம் உணர்மனதின் இரண்டாவது பகுதியில் தான் பகுத்துப்பார்க்கும் சுய உணர்வு ஏற்படுகிறது. இங்கு தான் நாமாகச் செயல்படுகிறோம்.

- இங்குதான் 'நாம் செயல்படுகிறோம்' என்ற தன்னுணர்வோடு செயல்படுகிறோம்.

தன்னுணர்வோடு செயல்படும் இந்த உணர்மனதை C-2 எனக் குறிப்பிடலாம். உணர்மனதின் முதல் அடுக்காக வெளிப்பட்ட உணர்ச்சிகளை C-1 எனக் குறிப்பிடலாம். 'நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம்' என்ற சுயநினைவோடு செயல்படும் C-2 பகுதிதான் நாம் பெரும்பாலும் செயல்படும் உணர்மனமாக உள்ளது. - conscious Mind ஆக உள்ளது.

C-1 பகுதி ஏற்படும்போது C-2 பகுதி எப்படி இருக்கிறது?

C-1 பகுதி ஏற்படும்போது அங்கு C-1 பகுதி மட்டுமே உள்ளது. C-1 பகுதி நிகழும்போது C-2 பகுதி மறைபொருளாகிவிடுகிறது.

C-2 பகுதி நிகழும்போது, C-1 பகுதி எப்படி இருக்கிறது?

C-2 பகுதி என்பதுதான் ஒரு Self Conscious நிலை. இதுதான் ஒரு தன்னறிவோடு செயல்படும் நிலை.

உண்மையில் C-2 பகுதிதான் உணர்மனதின் பிரதானமான பகுதி. அங்குதான் C-1 பகுதி தோன்றித்தோன்றி மறைகிறது

C-1 பகுதி தோன்றும்போது, C-2 பகுதி மறைபொருளாகிவிடுகிறது. C-1 பகுதி மறையும்போது, அதன் தாக்கம் - அது விட்டுச்சென்ற மிச்சம் மட்டும் C-2 பகுதியில் மேலும் ஒரு கணம் தங்கி இருக்கிறது.

மனவருத்தம் என்னும் உணர்ச்சி C-1 பகுதியாகும். அது ஒரு கணநேரத்தில் வந்து, கணநேரத்திலேயே முடிந்துவிடுகிறது.

மனவருத்தம் ஏற்பட்டது C-2 நிலையிலேயே அடையாளம் கண்டு புரிந்து கொள்ளப்படுகிறது. மனவருத்தும் கணநேரத்தில் மறைந்துவிட்டாலும், அதன் தாக்கம், சற்றுநேரம் C-2 பகுதியில் எஞ்சி இருக்கிறது.

C-1 பகுதி நிகழும்போது, அது நமது உணர்மனதின் முழுப்பகுதியையும் தனது ஆழுகையில் எடுத்துக்கொள்கிறது. அந்நிலையில் நமக்கு ஏற்படும் உணர்ச்சியின் அமைவு 100% முழுமையாக உள்ளது.

C-1 பகுதி மறைந்த நியில் அதன் தாக்கம் மட்டுமே C-2 பகுதியில் நீடிக்கிறது. அப்படி நீடித்திருக்கும் தாக்கமானது நம் உணர்மனதின் 40% பகுதியை மட்டுமே எடுத்துக்கொள்கிறது.

அந்த 40% நீங்கலாக எஞ்சியிருக்கும் 60% உணர்மனந்தான் நம்முடைய அறிவாகச் செயல்படுகிறது. இந்த 40% பகுதியும் 60% பகுதியும் நமது சராசரி உணர்மனமாக இருக்கிறது.

இந்த மொத்த உணர்மனமும் ஒரு வெளிப்பாடே. அடிமனதினால் உருவாக்கப்பட்ட ஒரு விளைவே.

C-1 மற்றும் C-2 ஆகிய இரண்டுமே ஒரு வெளிப்பாடே ; ஒரு விளைவே.

நமது அடிமனது என்பது இருப்பது தெரியாமல் இருந்து கொண்டிருக்கிறது.

நமது உணர்மனதிலும் C-1 பகுதி உணர்ச்சியாக வெளிப்பட்டாலுங்கூட தன்னறிவு இல்லாமலேயே இருக்கிறது.

நம் உணர்மனதிலுள்ள C-2 பகுதி மட்டுமே தன்னுணர்வோடும், சுயபுத்தியுடனும், செயலாற்றும் திறனுடனும் உள்ளது.

அது மட்டுமே தனது நினைவுக் குறிப்புகளை பயன்படுத்துகிறது; ஒப்பிட்டுப்பார்க்கிறது; சிந்திக்கிறது; முடிவெடுக்கிறது; முடிவுகளைச் செயல்படுத்துகிறது.

அது ஒரு தொடர் நிகழ்வாக உள்ளது. அதுவே தன்னை 'நான்' என்றும் கூறிக்கொள்கிறது.

C-1 ஆக ஏற்பட்ட அனுபவத்தைக்கூட தனக்கு ஏற்பட்ட அனுபவமாக இந்த C-2 எண்ணிக் கொள்கிறது.

அதனால்தான் C-1 ஐயும் C-1 னால் C-2 பகுதியில் ஏற்பட்ட தாக்கத்தையும் கூட நிர்வகிக்கும் பொறுப்பை இந்த C-2 எடுத்துக்கொள்கிறது.

உண்மையில் C-1 எப்படி ஒரு அனுபவமோ அப்படிதான் C-2 வும் ஓர் அனுபவமே.

ஆனால் C-2 தன்னை ஓர் அனுபவமாகக் கருதுவதில்லை. அது தன்னை ஒரு 'அனுபவிப்பவனாகவே' கருதுகிறது. தன்னை ஒரு கர்த்தாவாகவே கருதுகிறது.

நாம் நமது அன்றாடப் பணிகளைத் திட்டமிட்டுச் செய்கிறோம். அதற்கு முழுக்காரணம் இந்த C-2 தான். நமது செயல்களுக்கான கர்த்தா இந்த C-2 தான். இந்த C-2 இல்லாமல் நம்மால் எந்தப் பணிகளையும் செய்யமுடியாது.

C-1 க்கான கர்த்தா, இந்த C-2 கிடையாது. C-1 என்பது நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளாகவும், நமக்கு ஏற்படும் எண்ணங்களாகவும் (Thought) இருக்கலாம்.

C-1 ன் கர்த்தா நமது அடிமனதாகவும் இருக்கலாம் அல்லது ஆழ்மனதாகக்கூட இருக்கலாம். ஆழ்மனது என்பது இந்த பிரபஞ்ச மனதைக் குறிக்கிறது.

C-1 ன், மூல நிலை எதுவாகவும் இருக்கலாம். ஆனால் வெளிப்படுவது அனைத்தும் C-1 ஆகத்தான் வெளிப்படுகிறது. வெளிப்பட்டது மட்டுமே நமக்குத் தெரியும். காரணத்தை அறியமுடியாது; மூலத்தை அறிய முடியாது.

C-1 ல் வெளிப்பட்ட உணர்ச்சியின் மிச்சமும், தன்னுணர்வு நிலையுமாக C-2 வெளிப்படுகிறது. C-2 வின் நிகழ்வுக்குக் காரணம் - கர்த்தா நமது அடிமனமாகவும் இருக்கலாம் ஆழ்மனமாகவும் இருக்கலாம்

ஆனால் C-2 வின் பெரும்பகுதி சுயபுத்தியாக இயங்குகிறது.

தாமாகச் சிந்தித்து தாமாக முடிவெடுக்கும் தகுதியோடு உள்ளது.

தாமாகச் சிந்தித்து, தாமாக முடிவெடுக்கும் தகுதி அதற்கு அதிகமாக இருக்கும்போது மட்டுமே அதனை C-2 ஆகக் கருதமுடியும்.

தன்னையறியாமல் செயல்படும் தகுதியோடு இருக்கும்வரை அதனையும் C-1 ஆகவே கருதவேண்டும்.

நம்மையறியாமல் நமக்குள் எது நடந்தாலும் அதற்கு நாம் பொறுப்பல்ல.

- அது அகச்செயலாக இருந்தாலும் சரி; அல்லது புறச்செயலாக இருந்தாலும் சரி. நாமாகச் செயல்படும் பகுதியையே C-2 என்று கூறமுடியும். மற்றவை அனைத்தும் C-1 தான்.

நம் மனதில் மனவருத்தம் என்னும் உணர்ச்சி C-1 ஆக வெளிப்படுகிறது.

மனவருத்தத்திலிருந்து விடுபட வேண்டும் எனும் எண்ணம் வெளிப்படும் பகுதி C-2 ஆக இருந்தாலுங்கூட

அது நம்மையறியாமல் ஏற்படும் பட்சத்தில் C-2 ஐக்கூட C-1 ஆகவே எடுத்துக்கொள்ளவேண்டும்.

நாமாகச் சிந்தித்து, நாமாக முடிவெடுத்து, C-1 லிருந்து விடுபடவேண்டும் என்ற தீர்மானத்துக்கு வருவதுதான் உண்மையில் C-2 ஆகும்.

C-2 வைப் பொறுத்த அளவில் அதற்கு தன்னையோ அல்லது C-1 ஐயோ சீரமைக்கும் கடமை எதுவும் கிடையாது.

C-1 மற்றும் C-2 பகுதி இரண்டுமே இயற்கையானவை. தாமாகத்தோன்றியவை; நமது இயல்பிலிருந்து தாமாகத் தோன்றியவை.

ஆனால் C-2 விலிருக்கும் 60% பகுதிக்கு மட்டும் தானாகச் சிந்தித்து தானாக முடிவெடுக்கும் திறன் உள்ளது.

நாமாகச் சிந்தித்து உருவாக்குவது அனைத்தும் செயற்கையானது; அது திட்டமிட்டு செயல்படுத்தப்படுவது. செயற்கையைக் கொண்டு இயற்கையை வெல்லமுடியாது.

நமது உணர்ச்சியாகச் செயல்படும் இயற்கையை வெல்ல இந்த 60% பகுதியால் முடியாது.

ஆனால் நமது புறச் செயல்கள் இயற்கையானவை அல்ல. அவை செயற்கையானவை.

செயற்கையை நிர்வாகம் செய்ய மட்டுமே இந்த 60% பகுதி மூலமாகப் பங்கு பெறலாம். புறச்செயல்கள் அனைத்தும் நமது வசதிக்கேற்ப நாமாக உருவாக்கிக் கொண்டவை.

நமது வசதிக்கேற்ப அதை எப்போது வேண்டுமானாலும் மாற்றியமைத்துக் கொள்ளலாம். புறச்செயல்களிலும் சிலவற்றை மாற்றியமைக்க முடியாமற் போய்விடலாம். ஆனாலும் சாத்தியப்பட்ட முயற்சிகளை மேற்கொள்ளும் உரிமையும் கடமையும் இந்த C-2 உணர்மனதின் 60% பகுதிக்கு உண்டு.

மனதைப் பயன்படுத்தி நமது செயல்களை நாம் நிர்வாகம் செய்து கொள்ளலாம். ஆனால் மனதைப் பயன்படுத்தி மனதையே நிர்வாகம் செய்ய எண்ணுவதுதான் தவறு.

உணர்மனம் என்பது ஒரு விளைவாக - Reaction ஆக இருந்தாலும் அதனால் ஏற்படுவதும் ஒரு விளைவல்ல; ஒரு Reaction அல்ல. அங்கு நாமாகச் செய்யக்கூடிய செயல் ஏற்படுகிறது. நாமாக செய்யக்கூடிய செயல் அறிவுள்ள செயலாக அமையவேண்டும்.

அது அறிவற்ற செயலாக அமையக்கூடாது. நிகழ்வுக்கு அறிவு கிடையாது. செயலுக்கு அறிவு உண்டு.

நமது செயல் அறிவுள்ள செயலாக அமைவது அனைவருக்கும் நன்று. ★

## அழகு என்றால் என்ன?

எது அழகு? எங்கே இருக்கிறது அழகு? பார்க்கும் பொருளிலா, இல்லை உங்கள் கண்ணிலா? அழகைப் பற்றிய உங்கள் கருத்தைத்தான் நீங்கள் பார்க்கும் பொருளின்மேல் சுமத்துகிறீர்கள். அங்கே ஒரு அழகான மாலைக் கதிரவனின் மறையும் காட்சி தென்படுகிறது. அது அழகாக இருக்கிறது என்று உங்களுக்குள் நீங்களே சொல்லிக் கொண்டால் கூட அதனை நீங்கள் உண்மையில் பார்த்துக் கொண்டிருக்கவில்லை. அழகு பொருளில் இல்லை; பார்க்கும் உங்கள் கண்களிலும் இல்லை; முற்றிலுமாய் நீங்களே அங்கே இல்லாத போதுதான் அது இருக்கிறது. எப்படி என்றால், அழகு என்பது என்ன? உண்மையில் யாருக்கும் தெரியாது. அழகை அனுபவித்து அதைச் சொல்வதற்கு உள்ளே யாருமே இல்லாத போது, உங்களது முழு இருப்பையும் ஒன்று நிரப்புகிறதே அதனை வேண்டுமானால் அழகு என்று சொல்லலாம். அனுபவிக்கும் ஒரு அமைப்பின் மூலம் எப்பொழுது அழகினை சிறைப் பிடிக்கிறீர்களோ அப்போதே அது தொலைந்து போகிறது.

**J. கிருஷ்ணமூர்த்தி** (J.K.உடன் நடந்த உரையாடலில் இருந்து)

## "ஞானவாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்"

"ஞானவாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்" ஒரு வித்தியாசமான புத்தகம் என்பதை முன்பக்க அட்டையே புரிய வைத்துவிட்டது. இந்தப் புத்தகம் ஒரு 'மாயக்கண்ணாடி' அல்ல (இதைப் படிக்கும் அன்பர்களுக்குப் புரியும்) இது ஒரு 'மாயையை அகற்றும் கண்ணாடி' ஒவ்வொரு Chapter ஐயும் படித்து முடித்தவுடன் நன்றி உணர்வு எனக்கு பொங்கிப் பிரவகிக்கிறது. எனக்குள் இருக்கும் யதார்த்தத்தை, குழந்தைத் தன்மையை உணர வைத்த "LIVING MASTER" ஸ்ரீபகவத் ஐயா அவர்களுக்கு என்றென்றும் நன்றி. பொதுவாக சீடர்கள்தான் குருவிற்கு தட்சணை கொடுப்பார்கள். ஆனால் கரை காணாமல் ஏங்கி தத்தளித்த உள்ளங்களுக்கு குருவே கொடுத்த தட்சணை தான் "ஞானவாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்" என்ற இந்தப் புத்தகம். இன்னும் பல நூற்றாண்டுகளுக்கு ஐயாவின் புத்தகங்கள் பேசப்படும். இதற்கு உறுதுணையாக இருந்து செயல்படும் ஸ்ரீ பகவத் மிஷன் அன்பர்களுக்கு என்றென்றும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்,
**V. S.** சரண்குமார், Zen Sung அக நூலகம்
திருச்சி. செல் : 98940-12639

## ஐயாவின் "ஞானவாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்" புத்தகத்தைப் பெற விண்ணப்பிக்கும் இடங்கள் :

★ ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்
23/10, Old Bank of Baroda Street,
Secretariate Colony, Ambattur, Chennai - 600 053.
Cell : 9884097438, 9952071525.

★ ஸ்ரீ பகவத் மிஷன், திருப்பூர் மையம்
ஸ்ரீ பாலகுமரன் நிட்ஸ்,
40, தட்டான் தோட்டம், 4-வது தெரு,
பல்லடம் ரோடு, திருப்பூர்-4.
செல் : 9944044988, 9442215248, 9865623709

★ ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மையம்,
270, பொத்தனூர் ரோடு, முருகன் தியேட்டர் எதிரில்,
பரமத்தி வேலூர், நாமக்கல்.
செல் : 9360579181, 9360110755, 9787253751

★ ஸ்ரீ பகவத் மிஷன், சேலம் மையம்
அம்ருதா ஹோமியோ கிளினிக்,
8A/189, சரஸ்வதி தெரு, அத்வைத ஆஸ்ரமம் ரோடு,
புதிய பஸ் நிலையம் எதிரில், சேலம்-636 004.
செல் : 9488694453, 9894377433, 9443290559

★ ஸ்ரீ பகவத் மிஷன், P. ராஜவேலன், பூரணி கேஸ் ஏஜன்ஸி,
மாரியம்மன் கோவில் அருகில், அக்குர் (Po.) மயிலாடுதுறை வழி,
நாகப்பட்டிணம்-609 801.செல் : 9150405092

## சந்தாவை செலுத்தாதவர்களுக்கு ஒரு வேண்டுகோள்

நமது பகவத் பாதை மாத இதழ் இதுவரை 18 மாதங்களாகத் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கிறது. நமது இதழை நாமாகவே நமது ஆர்வத்தின் காரணமாக கேட்காத பலருக்கும் இதுவரை அனுப்பி வைத்துக்கொண்டிருக்கிறோம். இம்மாத இதழின் செலவுகளை மேற்கொள்வதற்காக சந்தா நிர்ணயம் செய்து, அதை வழங்குமாறு கடந்த 3 மாதங்களாக வேண்டுகோள் விடுத்துள்ளோம். நமது வேண்டுகோளை ஏற்று இதுவரை சந்தா மற்றும் நன்கொடை வழங்கியவர்களுக்கு எங்களது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம். மேலும் சந்தாச் செலுத்தாதவர்கள் மே 5 க்குள் செலுத்தி தங்களுக்கு பாதை தொடர்ந்து வர உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம். இதற்கு மேலும் சந்தா செலுத்தாத அன்பர்கள் தாங்கள் பகவத் பாதை மாத இதழ் பெற விரும்பாததைத் தெரிவிப்பதாகக் கருதி அவர்களுக்கு மே மாதத்தில் இருந்து பாதை வராது என்பதைத் தெரிவித்துக்கொள்கின்றோம்.

சந்தா செலுத்திய அன்பர்கள் எவருக்காவது மே மாதத்திலிருந்து பாதை வரவில்லை என்றால் அவர்கள் சந்தா எண்ணை நினைவில் வைத்து எங்களோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம். (99942-05880, 97891-65555)

பின்வரும் ஏதாவது ஒரு வழியில் சந்தாவைச் செலுத்தலாம்.

1. சந்தா - ரூ. 100/- (1 ஆண்டு) ரூ. 200/- (2 ஆண்டு) ரூ. 300/- (3 ஆண்டு) ரூ. 500/- (5 ஆண்டு)
2. ஆயுள் சந்தா - ரூ. 1000/-

நன்கொடைகளை வழங்கி ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் பங்கெடுத்துக்கொள்ள விரும்புபவர்கள் பின்வரும் ஏதாவது ஒரு வழியில் உதவலாம்.

1. ஆண்டு நன்கொடை - ரூ. 1000/- (ஆண்டு ஒன்றுக்கு)
2. ஆயுள் நன்கொடை - ரூ. 10,000/-

நன்கொடை மற்றும் சந்தா அனுப்புபவர்கள் "Sri Bagavath Mission" என்ற பெயரில் சேலத்தில் செல்லதக்க Cheque, D.D. அல்லது M.O. ஆக அனுப்பலாம். அல்லது, HDFC, Car Street Branch, Salem, A/c. No. 15907620000075, IFSC : HDFC 0001590 என்ற எண்ணில் நேரடியாக செலுத்தலாம். Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் செல் : 9789165555 என்ற எண்ணில் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன்
தலைமையகம், சேலம்.

## ?கேள்வி பதில்

கேள்வி :ஜீவாத்மா, பரமாத்மாவில் இணைய வேண்டும். அப்படி இணைவது தான் முக்தி என்று கூறப்படுகிறது. நாம் இறைநிலையுடன் கலப்புறுவதுதான் வாழ்வின் முடிவு நிலை என்று கூறப்படுகிறது. 'நான்' என்ற தன்மை கரைந்து மெய்ப்பொருளாக மாறவேண்டும் என்றும் கூறப்படுகிறது. விழிப்புநிலை, பிரம்மநிலை, உணர்வுநிலை, துரியாதிதநிலை, பூரணநிலை என்ற நிலைகளில் நாம் எப்போதும் இருப்பது தான் முக்தி என்று கூறப்படுகிறது. அப்படி நாம் எப்போதும் அயராத விழிப்புநிலையில் இருக்க முடியுமா? எளிமையாகப் புரிந்துகொள்ளும் படி விளக்கவும்.

பதில் : ஜீவாத்மா, 'நான்', 'நாம்' என்று கூறுவது அனைத்தும் நம்மையே குறிக்கிறது. பரமாத்மா, இறைநிலை, மெய்ப்பொருள், ஆகாயம், பூரணம் என்று கூறுவது மெய்ப்பொருளைக் குறிக்கிறது. நாம் இறைநிலையை அடைந்து முழுமை பெறுவதுதான் வாழ்வின் நோக்கம். அப்படிப்பட்ட நோக்கம் நிறைவடையும் வரை பிறவி இருந்துகொண்டுதான் இருக்கும் என்று சாஸ்திரம் கூறுகிறது. எப்படித்தான் மெய்ப்பொருளை அடைவது? பிறவியை எப்படித்தான் முடித்துக்கொள்வது? இதற்காகத் தான் எல்லா ஆன்மிகப் பயிற்சி, முயற்சிகளையும் நாம் தொடர்ந்து செய்து கொண்டே இருக்கிறோம். ஆனாலும் நம்மால் ஒரு முடிவுக்கு வரமுடியவில்லை. விழிப்புநிலையிலேயே நாம் எப்போதும் இருக்கமுடிந்தால் நாம் எப்படியும் மெய்ப்பொருளை அடைந்துவிடமுடியும் என்று நாம் தொடர்ந்து முயற்சிகளை மேற்கொள்கிறோம்.

நம்மால் எவ்வளவு முயன்றும் விழிப்புநிலையில் எப்போதும் இருக்கமுடியவில்லை. அதனால் நாம் தியானத்திற்கும், பயிற்சிகளுக்கும் அதிகமான நேரம் ஒதுக்கி தீவிரமாக ஈடுபட்டால் மட்டுமே நம்மால் அந்த விழிப்புநிலையை அடையமுடியும் என்று நினைத்து செயல்படுகிறோம். அப்படி யாராவது விழிப்புநிலையை அடைந்து இருக்கிறார்களா என்றால் மிக மிக குறைவான வெகு சிலர் மட்டுமே. இதனாலே 'நாம் அந்த விழிப்புநிலையை அடைவதற்கு நமக்கெல்லாம் வாய்ப்பே கிடையாது. அவ்வளவு பயிற்சியும், தியானமும் நம்மால் செய்யவும் முடியாது' என முடிவு செய்து ஒரு நிறைவேறாத தன்மைக்கு வந்து விடுகிறோம்.

உடல், மனம் என்ற இரண்டையும் கடந்து உள்ளே இருக்கும் இறைநிலை, வெளியே எங்கும் பரந்து விரிந்து இருக்கும் இறைநிலையுடன் கலக்கும்போதுதான் வாழ்வு முழுமையடையும் என நாம் நினைக்கிறோம். அப்படி இறைநிலையுடன் கலந்துவிட்டால் நமக்கு எப்போதும் விழிப்புநிலை ஏற்பட்டுவிடும் என்று நம்புகிறோம். அதற்காக தான் தியானத்தில் தீவிரமாக ஈடுபட்டு வருகிறோம்.

உண்மையில் நாம் எப்போதும் இறைநிலையில் தான் இருக்கிறோம். ஒரே இறைநிலைதான் நமக்கு உள்ளேயும் இருக்கிறது. வெளியேயும் இருக்கிறது. எப்படி என்று நீங்கள் கேட்பது எனக்கு நன்றாகப் புரிகிறது.

வேதாத்திரி மகரிஷி அவர்கள் இறைநிலை விளக்கத்திற்காக ஓர் உதாரணம் கூறுவதுண்டு. அதாவது ஓர் பாத்திரத்தில் தண்ணீர், அதில் ஒரு கைப்பிடி அளவு பச்சை பயறு போடவேண்டும். 6 மணி நேரத்திற்குப் பிறகு பார்த்தால் பாத்திரத்தில் தண்ணீர், பயறின் உள்ளேயும் தண்ணீர். அதாவது பயறின் உள்ளே தண்ணீர் ஊடுருவியுள்ளது என்பது நமக்கு நன்றாகப் புரிகிறது. பயறுக்கு வெளியேயும் தண்ணீர், பயிருக்கு உள்ளேயும் தண்ணீர். தண்ணீரில் பயறு இருக்கும். பயறிலும் தண்ணீர் இருக்கும்.

தண்ணீர் தான் இறைநிலை. நாம் தான் பயறு என்று வைத்துக்கொள்வோம். நம்மை சுற்றி எப்போதும் நீக்கமற நிறைந்து இருப்பது இறைநிலை. நமக்கு உள்ளே இருப்பதும் அதே இறைநிலைதான்.

நமக்கு உள்ளே இருக்கும் இறைநிலை, நமக்கு வெளியே இருக்கும் இறைநிலையுடன் கலக்க வேண்டும் என்பது தான் நமது நோக்கம். நமது உடலை Microscope வைத்து பார்த்தால், ஒரு அணுவுக்கும் மற்றொரு அணுவுக்கும் இடையே இடைவெளி (Gap) இருப்பது நன்றாகத் தெரியும். மேலும் நன்றாக புரிந்துகொள்ள ஓர் உதாரணம். ஒரு சல்லடை தான் நமது உடல் என வைத்துக்கொள்வோம். காற்றுதான் இறைநிலை என்று வைத்துக்கொள்வோம். சல்லடை என்ற உடல், காற்று என்ற இறைநிலையில் உள்ளது. சல்லடையின் இருபுறமும் இருப்பது ஒரே காற்றான இறைநிலை மட்டுமே.

நாம் நம் மனதை உடல் அளவிற்கு எல்லைகட்டி விடுவதால்தான் உடலின் உள்ளே இருக்கும் இறைநிலை, எங்கும் உள்ள இறைநிலையுடன் கலப்புறவேண்டும் எனக்கடுமையான தவமுயற்சிகளை மேற்கொள்கிறோம். இந்த உண்மையை நன்றாகப் புரிந்துகொண்டால் நாம் எப்போதும் இறைநிலையில் தான் இருக்கிறோம் என்பது நமக்குப் புரியவரும். இதனால் நமது மனம் தேவையில்லாமல் அலைபாயாமல் அமைதியும் நிறைவும் அடையும்.

அயராத விழிப்புநிலையை முயற்சி செய்து அடையமுடியாது. நாம் முயற்சி செய்யும்வரை நம்மால் விழிப்புநிலையை தவறவிட்டுவிடுவோமே தவிர, அடையவே முடியாது. நமது மனம் இருவகைத் தன்மையில் இயங்குகிறது. ஒன்று நமது மனதின் கவனத்திற்கு வராத நிலை (Unconscious Mind) அதுவே தான்
பிறகு நமது மனதின் கவனத்திற்கு வருகிறது. நமது மனதின் கவனத்திற்கு வருவதைத் தான் நாம் (Conscious Mind) என்று கூறுகிறோம். நமது மனதின் கவனத்திற்கு வந்தபிறகு நாமாக சிந்திப்பதும், செயல்படுவதும் (Conscious Mind) ஆகும்.

Unconscious Mind - நமது மனதின் கவனத்திற்கு வராத பகுதி. அது நமது கட்டுப்பாட்டில் இல்லை. நமது கட்டுப்பாட்டில் இல்லாத இந்தப் பகுதியில், நாம் விழிப்புநிலையை எதிர்பார்ப்பது எந்த வகையிலும் நடக்காது.

உதாரணமாக நமக்கு முதலில் தாமாக ஓர் எண்ணம் (Thought) வருகிறது. இது நமது Unconsciousness பகுதி ஆகும். பிறகு அதுவே தான் நமது Conscious Mind னால் நமக்கு இப்படி ஓர் எண்ணம் (Thought) வந்துள்ளது என்பதை நமது Conciousness பகுதி புரிந்துகொள்கிறது. நமது Consciousness பகுதியில் நன்றாகப் புரிந்துகொண்ட பிறகு, அதற்கு மேலாக நாமாகச் சிந்திப்பதற்கும், (Thinking) செயல்படுவதற்கும் (Action) நாம் மட்டுமே பொறுப்பு.

Unconsciousness பகுதியிலிருந்து Consciousness பகுதிக்கு நாம் வந்தபிறகுதான் நமக்கு விழிப்புநிலையே ஏற்படமுடியும். நம்முடைய பிரச்சனைகள் எதுவும் Unconsciousness பகுதியில் இல்லை. Conciousness பகுதியில்தான் நாம் விழிப்புடனும், கவனத்துடனும் இருந்து, நமது பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண வேண்டியுள்ளது. நாம் எப்போதெல்லாம் Conciousness பகுதியில் இருக்கிறோமோ அப்போதெல்லாம் நம்மால் விழிப்புநிலையில் இருக்கமுடியும். நாமாக விழிப்புநிலையிலிருந்து சிந்திப்பதும், செயல்படுவதும் சமுதாயத்தின் தர்ம நியாயத்தை அடிப்படையாகக் கொண்டே இருக்கவேண்டும். இல்லை என்றால் சமுதாய வளம் குன்றிவிடும். இப்படி மட்டுமே நம்மால் Conciousness பகுதியில் விழிப்புடன் இருக்கமுடியும்.

Unconsciousness - பகுதி நம் கட்டுப்பாட்டில் இல்லை என்பதை புரிந்துகொள்வதால் மட்டுமே conciousness பகுதியில் விழிப்பு நிலை தாமாக ஏற்பட்டுவிடும்.

Unconscious Mind - அகம் - நமது கவனத்திற்கு வராத நிலை

Conscious Mind - புறம் - நமது கவனத்திற்கு வந்த பிறகு நாமாக சிந்தித்துச் செயல்படும் நிலை.

**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942-05880

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

உங்கள் அனைவருக்கும் தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துகளை தெரிவித்துக்கொள்கிறேன்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் "தன்னை அறியும் ஞானம்" என்ற தலைப்பில் 7-4-2013 அன்று மாலை மேற்குத் தாம்பரம் பகுதியில் சிறப்புரை ஆற்றினார்கள். இதில் 200க்கும் மேற்பட்ட புதிய அன்பர்கள் கலந்து கொண்டனர். இதனை திருவாளர் கந்தவடிவேல் ஆடிட்டர் அவர்கள் ஏற்பாடு செய்திருந்தார். அவர்களுக்கு நமது நன்றியை தெரிவித்துக்கொள்வோம்.

பகவத் ஐயா அவர்கள் தீவிரத் தேடுதலினால் தனக்குக் கிடைத்த ஞானத்தெளிவை சாதாரண மக்களும் பயன்பெறும் வகையில் மிக எளிதாக்கி அனைவருக்கும் வழங்கி வருகிறார்கள். இதனால் பயனடைந்த பலர் “யாம் பெற்ற இன்பம், பெறுக இவ்வையகம்” என்ற நோக்கில் ஐயாவின் சிறப்புரைகளை ஏற்பாடு செய்தும் மற்றும் ஏற்பாடு செய்பவர்களுக்கு உடன் இருந்து உதவியும் தொண்டாற்றி வருகிறார்கள். இந்த வகையில் உண்மையை உலகுக்கு தெரிவிப்பது கூட ஓர் உயர்ந்த தொண்டே.

நமது பாதையில் வரும் கட்டுரைகளும், கேள்வி பதில்களும் மிகவும் பயனுள்ளதாக இருக்கின்றது என்று சொல்லி இப்பாதையில் பயணிக்கும் பலர் தங்களது நன்றி உணர்வை தெரிவித்து பாராட்டி வருகிறார்கள். இவர்கள் இத்தோடு நில்லாமல் இப்பாதையை தன் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அறிமுகப்படுத்தி அவர்களும் பயனடைய உதவுமாறு கேட்டுக்கொள்கின்றேன். மேலும் நம் நெருங்கிய நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் பிறந்தநாள் மற்றும் திருமணநாள் பரிசாககூட இம்மாத இதழை வழங்குவதற்காக நன்கொடை சந்தாவைச் செலுத்தி அவர்களும் பாதை பெற உதவுமாறு கேட்டுக்கொள்கிறேன். “யாம் பெற்ற இன்பம், பெறுக இவ்வையகம்”.

அன்புடன்,
**K.S. ஜீவமணி,** ஆசிரியர்,
செல் : 97891-65555

## ஐயாவுடைய நிகழ்ச்சி

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 21-04-2013 ஞாயிறு | திருமால் திருமண மண்டபம், Old CTH Road, அம்பத்தூர், சென்னை. | **கர்ம வினைகளுக்கு அறிவியல் ரீதியான பரிகாரங்கள்** மாலை 5-30 to 8-00 மணிவரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், செல் : 98840 97438, 99520 71525 |
| 25-04-2013 முதல் 28-04-2013 | சத் தரிசனம், ஆனைக்கட்டி. | **சத் சங்கம் மற்றும் கலந்துரையாடல்** | திரு. ஆனந்தகுமார் செல் : 98422-31582 |
| 01-05-2013 புதன் | புதுக்கோட்டை அரண்மனை வளாகம், 4, கலெக்டர் அலுவலக ரோடு, கண்டோன்மெண்ட், திருச்சி. | **தன்னை அறியும் ஞானம்** காலை 10-00 to 12-00 மணிவரை | திருமதி. ஜெகதாம்பாள், செல் : 98942-803694 |

02-05-2013 முதல் 28-05-2013 வரை திருச்செந்தூர் - செல் : 99442 15677

## ஜென் கதை கர்வமும், மௌனமும்

ஒரு குரு இருந்தார். அவர் புதிர் போட்டு சிக்கலாகப் பேசுபவர் அல்லர். எல்லோருக்கும் புரியும்வகையில்எளிய முறையில் அமைந்திருக்கும் அவர் பேச்சு செயலெல்லாம். சூத்திரங்களையோ, பெரிய தத்துவ ஞானக் கருத்துகளையோ, அவர் சொல்வதில்லை.

இதயத்தைத் தொடுகிற முறையில் நேரடியாக எளிமையாகப் பேசுவது அவர் வழக்கம். இதனால் ஊர் மக்கள் மத்தியில் குருவிற்கு நல்ல மதிப்பும், மரியாதையும் இருந்தது.

வேறு ஒரு பிரிவைச் சேர்ந்த கர்வம் கொண்ட பண்டிதர் ஒருவர் வாதிடுவதில் வல்லவராக இருந்தார். எவரையும் வெல்லும் திறமை படைத்தவர் என்ற பெருமையும், புகழும் அவருக்கு இருந்தது. அவர் குருவை சந்திக்க வந்தார்.

குரு தம் சீடர்களுடன் அமர்ந்திருந்தார். வந்தவர், வந்ததும் மரியாதைகூட இல்லாமல் "என்னைப்பணிய வைக்க உன்னால் முடியுமா?" என அகங்காரத்தோடு கேட்டார்.

"இங்கே வாருங்கள் என் பக்கமாக" என அழைத்து இருக்கை கொடுத்து அமரச்செய்து, குளிர்ந்த தண்ணீர் கொடுத்து உபசரித்தார்.

மாணவர்கள் என்ன நடக்கப்போகிறதோ என்று ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

குரு பண்டிதரைப்பார்த்து "ஐயா, தாங்கள் இப்போது உங்கள் கருத்துகளைக் கூறுங்கள்" எனக் கூறினார்.

பண்டிதர் விவாதிக்கத் தொடங்கினார். குரு அமைதியாக சலனமற்ற பார்வையால், பண்டிதரையும், அவரின் விவாதத்தையும் ஏற்றுக்கொண்டார். மூன்று மணிநேரம் பண்டிதர் விவாதிக்க குரு அமைதியாகக் கேட்டுக்கொண்டு மட்டுமே இருந்தார்.

குரு, பண்டிதரை "ஐயா மதியம் உணவருந்திய பின் மீண்டும் விவாதிக்கலாமே" எனக் கூறினார்.

பண்டிதர் உணவருந்தி ஓய்வுக்குப் பின் வாதிடத் தயராகி வந்தார். மறுபடியும் குரு அமைதியாக கேட்டுக்கொண்டு மட்டுமே இருந்தார். ஒரு நான்கு மணிநேர விவாதத்திற்குப் பிறகு, "இன்று நம் ஆசிரமத்தில் தங்கி உணவருந்தி, ஓய்வுஎடுத்து நாளை மீண்டும் விவாதிக்கலாமே" எனக் கூறினார் குரு. பண்டிதரும் ஏற்றுக்கொண்டார்.

பண்டிதர் இரவு உணவுக்குப் பின் தனிமையில் படுத்துக்கொண்டு யோசித்தார், 'நான் 8 மணி நேரத்திற்கு மேல் பேசியும் குரு அமைதியாகக் கேட்டுக்கொண்டு மட்டும் தானே இருந்தார். மேலும் எனக்குத் தேவையானவற்றைச் செய்வதில் மட்டுமே கவனமாக இருந்தார். ஆனால் நானோ அவரை எப்படியாவது மட்டம் தட்டி பணிய வைக்கவேண்டும் என்று எனது மன ஆதங்கத்தை செயல்படுத்திக் கொண்டிருந்தேன்'. குருவின் கனத்த மௌனத்தின்முன் தன் கர்வம் கரைவதை உணர்ந்தார் பண்டிதர்.

பண்டிதருக்கு இரவு முழுவதும் உறக்கமில்லை. குருவின் மௌனம், அரவணைப்பு, செயல்பாடு என திரும்பத் திரும்ப நினைவாக வந்துகொண்டே இருந்தது. காலை எழுந்ததும் குருவின் காலடியில் விழுந்தார். தன்னை மன்னிக்கும்படி வேண்டினார் பண்டிதர். உங்களிடம் விவாதிக்க எனக்கு வாய்ப்புக் கொடுத்தமைக்கு மிக்க நன்றி எனக்கூறினார் குரு.

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து.- திருக்குறள் (978)

'தன்னை உணர்ந்தவர்கள் எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்வார்கள்'






**Book packet** containing printed books

*If undelivered please return to:*

Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

To

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.